

# கறுப்பு இசைத்தட்டுகள்

அந்த மனிதன் தனக்கு கடல் வியாதி கண்டிருப்பதாகவும் கடலிலிருந்து இந்த ஊர் மிகத் தொலைவில் இருக்கிறதென்றும், தான் வந்த வழி முழுவதும் பாழ்பட்ட நிலங்களும் வெடிப்புகளுமாக இருக்கிறது - அதில் வெயில் அலைகிறதை தான் கண்டதாகவும் கூறினான். அப்போது சாமியடியானுக்கு ஏழு வயது நடந்து கொண்டிருந்தது. அந்த மனிதன் வருவதற்கு முந்தைய காலத்தில் அவர்கள் ஊரிலிருந்து தெற்கே போக மிகவும் பயப்பட்டார்கள். போய்க்கொண்டே இருக்கும் கரிசல் வெளி முடிந்ததும் கடல் இருக்கிறதென்றே அறிந்து வந்திருந்தார்கள். கடல் பற்றி அந்த ஊரிலே நெடும் தூரம் பயணம் போய் வந்த மூன்று பேர் மட்டுமே அறிந்திருந்தார்கள். அதுவும் அவர்கள் தங்கள் பயணத்தில் திசை தப்பிப் போயே கடலை அடைந்தார்கள். கடலைச் சந்தித்த காலத்தில் எங்கும் மழை பெய்துகொண்டேயிருந்தது. கடல் சீற்றம் கண்டு பாறைகளை உடைத்தது. மணல் பிராந்தியம் விரிந்து கிடந்தது. எங்கும் மழை. நசநசப்பு கொண்ட கரும்பாறைகள். கடல் நிறம் கருநீலத்தில் இருந்தது. சுழன்று சுழன்று நுரையாகத் தள்ளிய கடல், அவர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்போதே உயர்ந்து ஆள் உயரமாக எழும்பி அடங்கியது. கடற்கரையில் ஓடினார்கள். எல்லாப் பக்கத்திலும் கடல். தப்ப முடியாத கடல் வழியின் பயத்தில் மீண்டும் திசை தப்பினார்கள். அவர்கள் கடக்கும்போது மஞ்சள் நிறக் கடற்பறவைகளைப் பார்த்தார்கள். ஊர் திரும்பிய பின் மூவரும் கடல் வியாதி கண்டு இறந்துபோனார்கள். அவர்கள் உடம்பு முழுவதும் உப்பரித்துப்போயிருப்பதைப் பலரும் கண்டார்கள். கடல் வியாதியின் பயம் ஒவ்வொருவருக்கும் விவரிக்க முடியாத பீதியோடு அடைந்து கிடந்தது.

கடல் வியாதி கண்டு வந்திருந்தவன் குள்ளமாக இருந்தான். பெரிய நெற்றி. பருத்த உதடுகள். நெற்றியில் இரண்டு தழும்பு கள். கையில் ஒரு இரும்பு வளையம் போல ஒன்றை அணிந் திருந்தான். கண்கள் பழுத்துப் போய் சிவப்பு ஓடியிருந்தன. அவன் தொடர்ச்சியாகப் பேச முடியாமல் சங்கடப்பட்டான். பகல் முழுவதும் உறங்கினான். மாலையில் விழித்துக்கொண்ட வுடன் அந்த ஊரின் தெருக்களில் சுற்றுவான். சுற்றிலும் பொட்டல் நிலம் கொண்ட ஊர். நாலைந்து தெருக்களே இருந்தன. சாணம் மெழுகிய சுவர் கொண்ட வீடுகள். இடிந்த மண் சுவர்களின் உள்ளே பறவையின் அடங்கு குரல் கேட்கும். இரவில் பலத்த குரலில் வாந்தி எடுக்கத் தொடங்குவான். அவன் குரல் கேட்டுப் பயந்து சுவர்களில் ஊரும் பூச்சிகள் அசையாமல் நின்றன. இரண்டு விரல்களை வாயில் வைத்து வாந்தி எடுப்பான். நீலநிறத் திரவமாக வெளிவரும். தலையைக் கவிழ்த்துக்கொண்டு உட்காருவான்.

எண்ணெய் விளக்குகள் அணைக்கப்படும்போது எழும் வாடை அவனுக்குப் பிடித்திருந்தது. நாளுக்கு நாள் மெலிந்துகொண்டே போனான். அவன் தங்குவதற்காக ஊரின் கடைசியாக இருந்த வீட்டைக் கொடுத்தார்கள். அந்த வீட்டில் இருந்தவன் பெயர் தெரியாத காட்டுக் காயை, அது மஞ்சள் பழம் என நினைத்துக் காட்டிலே தின்று இறந்துபோயிருந்தான். யாரும் பார்க்காமல் கிடந்த அவன் சவம் பறவைகள் சுற்றிச் சுழல இரண்டு நாள் கிடந்தது. அந்த வீட்டின் பின்புறத்தை கடல் வியாதி கண்டவன் இடித்துப் போட்டான். வீடெங்கும் வெளிச்சம் வந்தது.

உறங்காத பகல் வேளையில் அவன் மூங்கில் குச்சிகளைத் தரையில் நட்டு அதன் நிழல் அலையும் தூரத்தைக் கணக்கிட்டுக் கொண்டிருப்பான். அவன் வீட்டில் இருந்து மோர்சிங் இசை போல ஒன்று கூட அடிக்கடி கேட்கும். அவன் திடீரெனக் கிளம்பி பகலில் எங்காவது வெளியே போய் வருவான். வரும்போது பல விதமான மணல்களை அள்ளிக்கொண்டு வருவான்.

அவன் பகலில் தெருவில் சுற்றுவது எந்தப் பெண்ணுக்கும் பிடிக்கவில்லை. பெண்கள் அவனைப் பார்ப்பதைத் தவிர்த்து வந்தார்கள். ஊரில் ஆண்களை விட அதிகம் பெண்களே இருந்தார்கள். அவன் தெருவில் போகும்போது நாய்கள் இச்சை கொண்டு ஒன்றை ஒன்று விரட்டிப்போவதை பல முறை பார்த்தான். அந்த ஊரிலிருந்த பெண்கள் உயரமாகவும் கருத்த

ஸ்தனங்களோடும் இருந்தார்கள். வீட்டுக்கு விலக்கு கண்டு தனித்திருந்த ஒரு பெண்ணை அவன் பார்த்தான். அவள் சிறிய குச்சின் உள்ளே சுருண்டு கிடந்தாள்.

ஒரு நாளின் மதியத்தில் நிலையற்றுப்போனவன் போல நிர்வாணம் கொண்டு அங்கு போனான். அவள் இதுபோன்று பிறந்த நிலையில் எதிர்ப்பட்ட ஆணைக் கண்டதில்லை. அவள் கத்தினாள். அதன்முன் அவளை அடைந்து உறவுகொண்டு போனான்.

இரண்டு நாள்களுக்குப் பின் அவளுக்கும் கடல் வியாதி வந்தது. அவளும் அவனைப் போலவே வாந்தியெடுத்தாள். அவள் சப்தம் கூட மாறிப்போனது. அவனைப் பிடித்து ஊரில் கட்டி வைத்தார்கள். அவன் தனது செயலுக்குப் பதிலீடாக தண்ணீர் கண்டு பிடித்துத் தருவதாகச் சொல்லி அவர்களை உடன் கூட்டிப் போனான். பல மணல் தரைகளைக் கடந்தார்கள். அவன் சாமியடியான் கையில் மூங்கல் குச்சி போல ஒன்றைக் கொடுத்து உடன் கூட்டிப்போனான். ஒரு தரையில் குச்சி ஆடியது. அந்த இடத்தில் தோண்டியபோது ஏழு நீர் ஊற்றுகள் ஒருசேர வந்தன. சாமியடியானுக்கு அவன் தண்ணீர் கண்டுபிடிக்கும் விதத்தைச் சொல்லித் தந்தான்.

சாமியடியான் பகல் ஒன்றில் அவன் வீட்டுக்குப் போனபோது அவன் இசை வாசித்துக்கொண்டிருந்தான். எதிரில் சிறு செடியிருந்தது. அது அவன் இசையைக் கேட்பது போல சாய்வு கொண்டிருந்தது. வாசித்து முடிந்ததும் அந்தச் செடியை மூடி, இருட்டில் வைத்தான். சிறிய மரக் குழலில் போய் வாயால் மூன்று முறை ஊதி வந்தான். உள்ளே இரையும் சப்தம் கேட்டது.

கடல் வியாதி கண்ட பெண் சில நாள்களில் காணாமல் போனாள். அதன் பின்பு கடல் வியாதி கண்டவன் இறந்துபோனான். அவன் இறப்பதற்கு முன் சிறு செடியையும் மூங்கில் குழலையும் சாமியடியானுக்கே கொடுத்தான். இறப்பின் இரவில் அவன் கண்கள் வெளிவர வாந்தியெடுத்தான். அவனை ஊர் தள்ளிக் கொண்டு போய்ப் புதைத்து வந்தார்கள்.

இசை கேட்கும் செடியை கடல் வியாதி கண்டவன் ஒரு தோட்டத் திலிருந்து திருடி வந்திருந்தான். அங்கிருந்தவனுக்குத்தான் இசை கேட்கும் செடிகளை உருவாக்கத் தெரிந்திருந்தது. சாமியடியான்

இசைத்தபோது செடி கவனம் கொள்ளவில்லை. அந்தச் செடியை மூடி வைத்து, மரக்குழலைப் பார்த்தான். மரக்குழலில் இரண்டு கறுப்புப் பூச்சிகள் இருந்தன. அதன் சிறகுகளில் வெள்ளைக் கண்கள் அமைந்திருந்தன. அந்தப் பூச்சிகளை சதுப்பு நிலத்தில் பிடித்துக்கொண்டு வந்திருந்தான். அதன் சிறகுகள் மெதுவாகவும் தொட்டவுடன் விரலில் நிறம் ஒட்டிக்கொள்வ தாகவும் இருந்தன. இந்தப் பூச்சியினம் கொஞ்ச நாளில் பல்கிப் பெருகிவிடும் என அவன் ஏற்கெனவே சொல்லியிருந்தான்.

சாமியடியான் அவற்றைப் பறக்கவிட்டான். வீட்டின் பின்புறம் வழியாக அவை பறந்து வானில் புள்ளியாக மறைந்தன. சாமியடியான் அதன் பின் வந்த காலத்தில் ஆடு மேய்த்துக் கொண்டு அலைந்தான். காட்டுவெளியில் எங்காவது கறுப்புப் பூச்சி தென்படுகிறதா எனப் பார்த்து வந்தான். ஒரு நாளில் கடற்பறவை பறக்க முடியாமல் ஊரின் நடுவே விழுந்தது. அதைக் கூண்டில் அடைத்து சில நாள் வளர்த்து வந்தான். அந்தப் பறவை தினமும் காலையில் எங்கோ பறந்து போய் மீனோடு திரும்பி வந்தது. சிவப்பு நிற அலகு கொண்ட பறவை அது. ஏழு நீரூற்றுகள் இருந்த இடம் குளம் போலானது. ஆட்கள் அதில் குளித்தார்கள். ஆடுகள் முகம் பார்த்தபடி தண்ணீர் குடித்தன. ஆட்டு தாடி தண்ணீரில் ஆடியது. சாமியடியானிடம் இருந்த செடி நாள்பட சுருங்கிக்கொண்டே போய் விரல் அளவில் ஆனது. அதை வீட்டின் மாடத்திலே வைத்திருந்தான். அந்தச் செடியின் இலைகள் சிறு நுண்துளை கொண்ட கண்களோடிருந்தன. அதில் இருந்த இலைகள் உதிரவேயில்லை. சாமியடியானுக்கு முப்பது வயதானபோது வீட்டின் பின்புறம் பல்வேறு நிறங்களும் வாசனைகளும் கொண்ட பூச்சிகள் வருவதைக் கண்டான்.

கணக்கில்லாத பூச்சிகள். எங்கும் நிறங்களின் மிதப்பு. ஊதா, சிவப்பு, மஞ்சள் நிறக் கண்கள் கொண்ட இறக்கைகள். நீண்டு சுருண்ட மயிர் போன்ற கொம்புகளை விரிப்பதும் மடிப்பதுமாக அலையும் பூச்சிகள். ஊரெங்கும் அதுபோல பூச்சிகள் வந்திருந்தன. எங்கிருந்து வந்தன எனத் தெரியவில்லை. பெண்கள் அந்தப் பூச்சிகளின் நிறத்தில் ஆசை கொண்டார்கள். நீலநிறப் பூச்சிகள்தான் அதிகம் இருந்தன. சாமியடியானின் மாடத்தில் இருந்த செடி பூச்சிகளின் சப்தம் கேட்டுத் திரும்பியது. பூச்சிகள் அதைச் சுற்றிச் சுற்றி இசைத்தன. மாடம் இடிபட்டது. சாமியடியானின் பெரிய மகள் செடியை எடுத்து வீட்டின் முன்புறமிருந்த காலி இடத்தில்

வைத்தாள். பூச்சிகள் மொத்தமும் அதைச் சுற்றின. செடி விடுவிடுவென வளர்ந்து பெரிதானது. பன்னீர்ப் பூ போல வெள்ளைப் பூக்கள் பூக்கத் தொடங்கின. அந்தப் பூக்களில் இருந்து வரும் சுகந்தம் ஊரெங்கும் பரவியது. உதிராத பூக்கள். எவரும் பறிக்கவும் வரவில்லை அவற்றை.

சாமியடியானின் மூன்று பெண்களும் பூச்சிகளின் மேல் பிரியம் கொண்டார்கள். அந்தப் பூச்சிகள் விரல் தொடும் தூரத்தில் அலைந்தன. பூச்சியின் மேல் இருந்த பொடி போன்ற நிறத்தினைத் தொட்டு நெற்றியில் வைத்துக்கொண்டார்கள். அந்தப் பூக்களின் ஊடே இரண்டு கறுப்புப் பூச்சிகளையும் சாமியடியான் கண்டான்.

நாளெல்லாம் இசைச் செடியின் பக்கமே பூச்சிகள் அலைந்தன. குழந்தைகள் பூச்சிகளை விரட்டியபடி அலைந்தார்கள். அந்தப் பூச்சிக்கு வண்ணத்துப்பூச்சி எனப் பெயர் வைத்தார்கள். அது பெயர் பற்றிய கவலையின்றி சுவர்களில் கூட ஒட்டிக்கொண்டது. சாமியடியான் வீட்டின் மூத்த பெண்ணான தன் மகளை அழைத்து அவளிடம் மட்டும் கடல் வியாதி கண்டு வந்தவன் பற்றிய கதைகளைச் சொன்னான். நாக்கு போன்ற இசைக் கருவியை அவளிடம் கொடுத்தான்.

அவள் அதன் பிந்தைய நாள்களில் கடல் பற்றி நிறையக் கனவு கண்டாள். கனவில் கடல் நீலநிறத்தோடும் எங்கும் வண்ணத்துப் பூச்சிகள் நிறைந்தும் காணப்பட்டது. ஆள் அரவமற்ற கடற் கரையில் அவள் ஆடையின்றிக் கிடப்பது போலவும் எங்கும் வண்ணத்துப் பூச்சிகள் பறப்பதாகவும் கனவு கண்டாள். இதே கனவு பல நாளும் வந்தது. அந்தக் கனவில் அவள் உடல் முழுவதும் பல நிறங்கள் வந்து சேர்ந்தன. உடம்பிலிருந்து வண்ணத்துப் பூச்சிகள் வெளிப்படத் தொடங்கின. அவள் பயந்து கத்தினாள். வண் ணத்துப் பூச்சிகள் கனவைத் தின்றுவிடுகின்றன என அவளுடைய பாட்டி சொன்னாள்.

பாட்டியோடு சாமியடியானின் பெண் பேசிக்கொண்டிருந்த போது கனவில் தோன்றும் நிறங்களைத்தான் வண்ணத்துப் பூச்சிகள் தின்று வாழ்கின்றன என்றும் கடல் வியாதி கண்டவன் வண்ணத்துப் பூச்சியினைத் தின்றுதான் உயிர் வாழ்ந்தான் என்றும் சொல்லி, மதியம் சுவரில் ஒட்டிய வண்ணத்துப் பூச்சியினைப் பிடித்து அதன் சிறகுகளை எடுத்துவிட்டு சிவப்பு வரி வரியான

அதன் வயிற்றைப் பிதுக்கி உள்ளிருந்த சிறு குழல் போன்ற ஒன்றை எடுத்துச் சுவைக்கத் தந்தாள். அது இனித்தது.

அன்றிலிருந்து சாமியடியானின் மூத்த பெண் பூச்சிகளைப் பிடித்து இனிப்பு திங்கத் தொடங்கினாள். சிறகுகளை நெற்றியில் ஒட்டிக்கொண்டாள். உடலெங்கும் சிவப்பு நிற மினுமினுப்பு வந்தது. பலரும் ஊரில் வண்ணத்துப் பூச்சியின் கனவால் தொல்லையுற்றார்கள். வண்ணத்துப் பூச்சிகள் அதிக இச்சையைத் தூண்டுவதை சாமியடியானே உணர்ந்தான். இருந்தும் அழிக்க முடியாத பூச்சியினம் பல்கிப் பெருகி எங்கும் நிறைந்தது.

தன் பெரிய மகள் வண்ணத்துப் பூச்சி உண்பதை அறிந்த அவன், உடனடியாக அவளுக்குக் கல்யாணம் செய்து வைத்தான். அதன் பின்பு பூச்சியின் நிறத்தில் அவள் லயிப்பு கொள்ளவில்லை.

விடியப்போகும் சமயம், வீட்டின் சுவர் ஒன்றில் ஆயிரக் கணக்கான கறுப்புப் பூச்சிகள் இடைவெளியின்றி ஒட்டிக் கொண்டு அப்பியிருந்ததைக் கண்டு சாமியடியான் இறந்து போனான். அவனைக் குளக்கரையின் புறத்தே புதைத்தார்கள்.

தன் வாழ்நாளில் சாமியடியான் ஏழு இடங்களில் நீரூற்றைக் கண்டுபிடித்தான். அவன் இறந்த பின்பு அவனின் இரண்டு மகள் களையும் முதல் பெண்ணின் கணவனே கட்டிக்கொண்டான். பதினாறு பிள்ளைகள் பிறந்தன. அவர்களுக்கு மூத்த பெண் காலததிலே வண்ணத்துப் பூச்சிகள், தட்டான்கள், நீர்த் தட்டான்கள் நிறைய வரத் தொடங்கின. நீர்த் தட்டான்கள் தண்ணீரில் அலைந் தன. கண்ணாடி போன்ற அதன் சிறகுகள் தண்ணீர் போலவே தெரிந்தன. தட்டானின் நீண்ட வால் ஆடிக்கொண்டே இருந்தது.

குழந்தைகளற்ற மூத்த பெண் கடல் வியாதி கண்டவன் பற்றித் தன் கணவனிடம் ஒரு நாளில் சொன்னபோது அவனால் நம்ப முடியவில்லை.

உறுதி செய்யும் பொருட்டு புதைக்கப்பட்டிருந்த கடல் வியாதி கண்டவனின் புதைகுழியைத் தோண்டி உள்ளே பார்த்தான். எலும்புகள் கூட இல்லை. இரும்புத் தகடு போன்ற ஒன்று மட்டுமிருந்தது. அதில் குறிகள் போன்ற எழுத்துகள் இருந்தன. அவன் வீட்டில் கடல் பற்றியே யோசித்துக்கொண்டிருந்தான். கடல் மிகத் தொலைவில் இல்லை என்பதை நிரூபிக்கத் தன் நாயுடன் பயணம் புறப்பட்டான்.

சாமியடியானின் மூத்த பெண் அழுதாள். உப்புப் பரிந்த பிணம் அவளுக்கு ஞாபகம் வந்தது. நாயும் அவளும் நடந்தபடி யிருந்தார்கள். நாய் சில தரையில் மோப்பம் கண்டு எதையாவது எடுத்து வந்தது. காட்டுக் கொடிகளில் பழங்கள் பழுத்துக் கிடந்தன. சிறு சிறு செடிகள் கூட இல்லாத வெற்று வெளிகளைக் கடந்து வந்தான். எதிர்ப்பட்ட கிராமங்களில் இருந்த ஆள்கள் அவனை விரோதமாகப் பார்த்தார்கள். பலருக்கும் கடல் இருக்கும் திசையே அறியவில்லை. பல நாள்களுக்குப் பின் ஆள் கூட்டம் போகும் பாதையைக் கண்டான். வண்டிகள் போய்க் கொண்டிருந்தன. நாய் வண்டியின் அடி நிழலிலே ஓடி வந்தது. புளிய மரங்கள் அடர்ந்த ரோட்டில் போனது வண்டி.

பல நிலக் காட்சிகளைப் பார்த்தான். பைத்தியக்காரர்கள் சங்கிலியிடப்பட்டு கம்பங்களில் கட்டிப்போடப்பட்ட இடம் கூடக் கடந்தான். நாக்கில் காற்று பட்டபோது வேறு சுவை வந்தவுடன் அவர்கள் சொன்னார்கள்.

''அதுதான் கடலின் திசை''

விடியும்போது கடலை அடைந்தான். பறவைகள் மிதந்து கொண்டிருந்தன. சூரியன் பிறந்து வரும் கடல். எங்கும் ஒரே நிறமாக இருந்தது. அதைக் கண்டு அழுதான். எவ்வளவு பெரிய கடல் எவ்வளவு தண்ணீர். ஓடிக் கடலில் விழுந்தான். கடல் உப்பு தாங்க முடியவில்லை. நாய் ஓடியது. காலடியில் இருக்கும் மணல் கரைந்துபோவது கண்டு நாய் மிரண்டு ஓடியது.

கடும் வெக்கையான பிரதேசம். கடல் நீங்கி வந்த வழியில் மீன் செத்துக் கிடந்தது. பெரிய கப்பல் நிற்கும் இடத்தைப் பார்த்தான். அதிசயப் பொருள்கள் நிறைந்த சந்தையில் முகம் பார்க்கும் கண்ணாடி வாங்கினான். அதன் அதிசயம் தாங்க முடியாததாக இருந்தது. ஊர் வரை எவரிடமும் பேசவில்லை. காட்டும் எந்தப் பொருளும் தெரியும் கண்ணாடியோடு ஊர் வந்தான். அவன் மனைவி, சாமியடியானின் மூத்த மகள் இந்த அதிசயம் தாங்காது மூச்சு அடங்கி மயங்கி விழுந்தார்கள். பலரும் கேள்விப்பட்ட கண்ணாடியை அவன் வாங்கிவந்தான். சாமியடியானின் மூத்த மகள் கண்ணாடி பார்த்தவாறுதான் இறந்துபோனான். அந்தக் கண்ணாடி வட்ட வடிவில் இருந்தது. இசைச்செடி மரமாகி யிருந்தது. கடல் பார்த்து வந்த அவன் தினமும் இருமத் தொடங்

கினான். அவனுக்கும் கடல் வியாதி வந்தது. அவன் இறந்த நாளில் வண்ணத்துப் பூச்சிகள் மரத்திலிருந்து உதிர்ந்தன.

சாமியடியானின் இரண்டு பெண்களும் வேறு ஒருவனைக் கல்யாணம் செய்தார்கள். குழந்தைகள் வளர்ந்து பெருகின. ஊரில் புதுத் தெருக்கள் முளைத்தன. புதிய ஆட்கள் நடந்து வந்து ஊரில் இடம் தேடிக்கொண்டார்கள். ஆச்சிகளிடம் எவருக்கும் லயிப்பு அற்றுப்போனது. சாமியடியானின் இரண்டாவது பெண் தனது மகனின் கல்யாணத்துக்காக அந்த ஊர் விட்டு வெகு தூரம் போய் வந்தாள். அவள் திரும்பும்போது ஒரு மோட்டார் காரைச் சந்தித் ததைப் பலரிடமும் சொன்னாள். அவளின் மகள் கர்ப்பமுற்று ஊர் திரும்பும்போது மோட்டார் கார் கதை நிறைய சொன்னாள். அவ ளுக்குக் குழந்தை பிறந்தபோது அந்த ஊருக்கே ஒரு மோட்டார் கார் வந்தது. அதில் வந்தவன் ஊர் நில அளவைக் குறித்துப் போக வந்திருப்பதாகச் சொன்னான். தினமும் ஊர் முழுவதும் சுற்றி அளந்து குறித்துக்கொண்டான். அவன் கோமாளி போலத் தொப்பியை ஒரு பக்கமாக அணிந்திருந்தான். அவன் தங்கியிருந்த நாள்களில் கறுப்பு வட்டமான தட்டு ஒன்றை, இயந்திரத்தில் போட்டுச் சுற்றிச் சுழல வைத்தான். அதிலிருந்து விநோத இசை வந்தது. சாமியடியானின் மூத்த மகள் மூலம் கடல் பற்றியும், இசைச் செடி பற்றியும் அறிந்த பெண், தன் குழந்தைக்கு இந்த இசையைக் கேட்கச் செய்தாள்.

தண்ணீர் ஓடும் சப்தம், வனத்தின் இரைச்சல், பூச்சிகளின் சப்தம் எல்லாமும் இசையில் இருந்தது. அவனைச் சந்திக்கப் போனாள், அவள். அருகில் நின்று அந்த சப்தங்களைக் கேட்டாள். அவன் அவளை முத்தமிட்டு அந்த இயந்திரத்தினை அவளுக்கே கொடுத்துப் போனான்.

அவள் இயக்கத் தெரியாத இசை இயந்திரத்தினைப் பார்த்தபடி நாள்களைக் கழித்தாள். அவளின் மகள் பெரியவளானபோது அதை இயக்கக் கற்றுக்கொண்டாள். அந்த இசைத்தட்டிலிருந்து தண்ணீர் சப்தம் வழிந்தது. அவள் கிராமம் நீங்கி நெடும் தொலைவிலிருந்த நகரம் போனாள். அவள் கணவன் சிப்பாயாக இருந்தான். அவனோடு கடல் பார்த்தாள். அதில் குளித்தாள். தனியான இரவுகளில் இசைத் தட்டுகளைச் சுழலவிட்டாள். இசை, மரித்தவர்களின் பாடலைத் திரும்பச் சொன்னது. அவ ளுடைய நாற்பதாவது வயதில் அந்த இசைத் தட்டு உடைந்தது.

பூர்வீக இசையும் கடலின் தன்மைகளும் இசைத்தட்டின் துணுக்குகளில் கூட இருப்பதாகவே அவள் உணர்ந்தாள்.

அவள் மோட்டார் காரை மிக அருகில் பார்த்தாள். உடைந்த இசைத்தட்டின் துகள் நிறம் கொண்ட வண்ணத்துப் பூச்சிகள் தன் முற்றத்தில் அலைவதைக் கண்டாள். அவளுக்கு அந்தப் பூச்சியைப் பிடித்திருந்தது. தன் மகனின் குழந்தைகளைக் காண அவள் நெடும் தூரம் போய் வந்தாள். அந்தக் குழந்தைகளுக்கு பல கதைகள் சொன்னாள். கடல் வியாதி வந்த ஒருவன் பற்றிக் கூட ஒரு கதை சொன்னாள். அது ''கடல் வியாதி வந்த ஒருவன் ஒரு கிராமம் நோக்கி வந்துகொண்டிருந்தான்'' எனத் தொடங்கியது.